egistered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 33—No. 7



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி ஆடி 1960 ஜுலை | இதழ் 7

உள்ளுறை . பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

## செய்திகள்

மாணிக்கவாசகர் திருநட்சத்திர விழா : சைவசித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் 28-6-1960 செவ்வாய்க்கிழமை மாலை 6-30 மணிக்குக் கொண்டாடப் பெற்றது. திரு. G. கல்யாணம் பிள்ளை, எம்.ஏ ("திருக்கோயில்" ஆசிரியர்) அவர்கள் தலைமை வகித்தார்கள். திரு. C. N. சிங்காரவேல் முதலியார், எம். ஏ. (துணைக் காரியதரிசி, சென்னை அரசாங்கம்) அவர்கள் மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய "திருவாசகம்" "திருக்கோவையார்" என்ற நூல்களைப் பற்றியும் அவருடைய வாசகங்கள் எப்படி இராமலிங்க சுவாமிகளிருதயத்தைக் கனிவித்தது என்பதைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

ஸ்ரீமதி அன்னவசந்தி சங்கம், பெங்களூர் : இச் சங்க மன்றத்தில், 28—6—60 செவ்வாய்க்கிழமை மாலை 6½-மணிக்கு, ஓய்வுபெற்ற சென்னை அரசாங்கத் துணைச் செயலாளர் - ராவ்சாயிப் - நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள், "சித்தி நெறி" என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

திருமணங்கள் : நமது சமாஜத்தின் துணைச்செயலாளர் திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி.எ. அவர்களின் அருமைப் புதல்வியர் திரு. கலாவல்லி, திரு. உமாதேவி ஆகிய இருவரும், காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரித் தலைவராகத் திகழ்ந்திருந்து மறைந்த பேரறிஞர். திரு. ம. சண்முக சுந்தர முதலியார், எம்.ஏ.,எல்.டி. அவர்களின் புதல்வர்கள் திரு. ம. ச. ஆனந்தன், A.I.S.M., M.Sc., திரு. ம. ச. சுந்தரம், B. Com. (Hons.) ஆகிய இருவரையும் சிறப்புற மணந்தனர். இரு திருமணங்களும் சென்னை சேத்துப்பட்டில் முறையே 6-7-60 அன்றும் 10-7-60 அன்றும் சிறப்பாக நடைபெற்றன. இரு திருமணங்களிலும் சமாஜச் சார்பில் வாழ்த்திதழ்கள் வழங்கப்பெற்றன.

மாதாந்தர வழிபாடு : சென்னை தியாகராய நகர்த் தருமபுர ஆதீனப்பிரசார நிலையத்தின் சார்பில் 3-7-60 ஞாயிறன்று காஞ்சிபுரத்திற்கு அடுத்த திருமாற்பேற்றில்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானிரியைஉள் நாடு

மலர் 33 | சார்வரி ஆடி 1960 ஜுலை | இதழ் 7

*இந்திய வழிவழிக் கலைச்செல்வத்திற்குத்
தென்னகம் தந்த பங்கு :

## சிந்தனையும் தத்துவமும்

(வேதாந்த வித்தகர், டாக்டர் - திரு. T. M. P. மகாதேவன் அவர்கள் M.A., Ph.D.)

1. முன்னுரை: இந்திய வரலாற்றில் மிகப் பழங் காலத்திலேயே, பலதிற அரசியல் வேறுபாடுகளுக்கு இடையிலும்கூட, ஒரு குறிப்பிடத் தக்க பண்பாட்டொருமை யுணர்ச்சி ஏற்பட்டிருந்தது. நெடுங்காலம் வரையில் நாட்டில் அனைத்தையும் இணைக்கும் ஒரு தனிப் பெரும் அரசாட்சி எதுவும் அமையவில்லை. பல சிற்றரசுகள் ஒன்றை யொன்று அடக்கியாளத் தம்முள் இகலிக் கலாம் விளைத்துக் கொண்டிருந்தன. அதன் விளைவாக நிகழ்ந்த அரசியற் பிணக்குகளே, அயல்நாட்டுப் படையெடுப்பாளர்கள் ஒவ்வொரு முறையும் எளிதில் வெற்றி பெறவும், ஒரு சில காலம் நாட்டை அடக்கியாளவும் துணை செய்வதற்கு முதற்பெருங் காரணமாக அமைந்தன. உள்நாட்டுப் பூசல்களிலும், அடிக்கடி நிகழ்ந்த வெளிநாட்டார் படையெடுப்புகளிலும்கூட, இந்தியாவானது இத்துணைக் காலமாக வழிவழியே தனது சமய - தத்துவப் - பண்பாட்டைப் போற்றிக் காத்து வந்துள தென்றால், அதற்குக் காரணம் நாட்டின் எல்லாப் பகுதிகளி

*Courtesy : All India Radio. தமிழாக்கம்: புலவர் முருகவேள்.

னும் எல்லாக் காலங்களிலும் தோன்றியருளிய அறிவுடைப் பெருமக்கள், நாட்டின் முழுமையுணர்ச்சியை இடைவிடாமல் மக்கள் மனத்திற் புகட்டிக்கொண்டிருந்த உண்மையேயாகும். நாட்டின் ஒருமைநிலையை அறிவுறுத்தி வந்த அப்பெருமக்கள் ஒவ்வொரு காலத்தில் இடையிடையே தோன்றி நிலவும் குறுகிய எல்லையுணர்ச்சிகளைக் கடந்து, தம்முடைய சொல்லாலும் செயலாலும், 'இந்தியா என்பது வடக்கே இமயமலைக்கும் தெற்கே கடல்களுக்கும் இடைப்பட்ட வெறும் நிலப்பகுதியன்று; பிளவும் சிதைவும் விளைக்கும் அழிப்பாற்றல்களை எதிர்த்து நிற்கும் ஓர் ஆன்மீகக் கருத்துப் பொருளும் தெய்வீக வாழ்க்கையுமே இந்தியாவாகும்' என மக்களுக்குப் போதித்து வந்தனர்.

கவிஞர்களும், அறிஞர்களும், ஞானிகளும், அடியார்களும், இந்திய வரலாறு அறிந்த நெடுங்கால முதல், உலகம் முழுமையுமே நலம் பெறுதற் பொருட்டு, மக்களை ஆன்மீக ஒருமை உணர்ச்சியைக் கைக்கொள்ளுமாறு வற்புறுத்தி வந்துள்ளனர். மனிதகுலத்தைப் பண்பாடு - சிந்தனைகளின் மூலமாக மீட்பதே, இச்சான்றோர்களால் வரையறுக்கவும் வழங்கவும் பெற்ற தத்துவக் கொள்கைகள் - சமய மரபுகளின் நோக்கமாகத் திகழ்ந்தது. ஒரு குறிப்பிட்ட தத்துவக் கருத்து அல்லது சமயப் பழக்கம், நாட்டின் எந்தப் பகுதியில் முதன்முதலில் தோன்றியதென்று சொல்வது, பெரும்பாலும் இயலாத தொன்றாகவே உள்ளது. என்றாலும், இந்தியாவின் பொதுவான வழிவழிக் கலைச்செல்வத்தை அமைத்தலில், ஒவ்வொரு நிலப்பகுதியும் குறிப்பிடத் தக்க வகையில் தனது பங்கைச் செலுத்தியுள்ளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். இந்தியத் தத்துவம் - சமயம் என்பனவற்றின் ஆக்கத்திற்காகத் தான் வழங்கியிருக்கும் நன்கொடைப் பங்கானது, ஆழ்ந்தும் அகன்று நிறைந்தும் விளங்குந்திறம் குறித்துத் தென்னகம் மிகவும் பெருமிதம் கொள்ளலாம்.

**2. வைதிக - அவைதிக நெறிகள்:** இந்தியத் தத்துவமானது நமக்குப் பலதிற அறிவுவிருந்தை நல்குகின்

றது. வைதிக நெறிகளுக்கும் அவைதிக நெறிகளுக்கும் இடையே, மிகப்பெரிய வேறுபாட்டறிகுறி ஒன்று வகுக்கப் பட்டுள்ளது. 'வைதிகம்' என்பது வேதத்தைப் பிரமாண மாக உடன்படுதலைக் குறிக்கும். 'அவைதிகம்' வேதத்தைப் பிரமாணமாக உடன்படாமையாகும். வைதிக சமயங்கள் சில, வேதத்தைப் பிரமாணமாக வெறும் பெயரளவிலேயே உடன்படுகின்றன. அவைதிக சமயங்கள் ஒரு சிலவகைகளில் வேதக் கருத்துக்களோடு ஒத்துச் செல்லுவதும் உண்டு. வைதிக சமயங்களுள், 'வைதிகம்' என்னும் சொல்லின் நேரிய பொருளுக்கு ஏற்ப, வேதத்தை அடிப்படையாகக் கொண்டவை மீமாஞ்சமும் வேதாந்தமுமே யாகும். மீமாஞ்ச மானது வேதத்தின் கிரியைப் பகுதியினின்று தனது தத்து வத்தை அமைக்க முயல்கின்றது. வேதாந்தமோ வேதத்தின் முடிவுப் பகுதிகளாகிய உபநிடதங்களினின்று உணர் வெழுச்சி பெறுகின்றது. மீமாஞ்சத்தில் முதன்மையாக இரண்டு பிரிவுகளும், வேதாந்தத்தில் பல பிரிவுகளும் உள் ளன. வைதிக சமயங்களில் ஒருசில வேதத்தைப் பிரமாண மாக உடன்பட்ட போதிலும், தமது கொள்கைகளுக்கு அடிப்படையாக ஆகமங்கள் என்னும் அருளியல் நூல்களையே பெரிதும் சார்ந்து நிற்கின்றன. அவைதிக சமயங்களில் முதன்மையான இரு சமயங்கள், ஜைனமும் பௌத்தமும் ஆகும். இந்தியத் தத்துவ வகைகளைச் சார்ந்த இச்சமயங்க ளெல்லாம் தென்னகத்திற் செழித்து வளர்ந்துள்ளன. இவை களில் ஒருசிலவற்றிற்குத் தென்னகம் பிறப்பிடம் அன் றெனினும், இவ்வெல்லா வகை மரபுகளின் விரிவுக்கும் வளர்ச்சிக்கும் தென்னகம் பெருந்துணை புரிந்துள்ளது.

**3.** மீமாஞ்சம்: மீமாஞ்ச தத்துவ வளர்ச்சிக்குத் தென்னாடு பெரும்பணி யாற்றி யிருக்கின்றது. 'பூர்வ மீமாஞ்சம்' என முழுப்பெயர் கொண்ட மீமாஞ்சமானது, 'கருமகாண்டம்' என வழங்கப்பெறும் வேதத்தின் கிரியைப் பகுதிகளை முறையாக ஆராயும் குறிக்கோளையுடையது. இக் கொள்கையின் அடிப்படைச் சூத்திரங்களை அருளிச் செய்த ஆசிரியராகிய ஜைமினி என்பவர், 'வேதத்தின் குறிக்கோள்

சமயக் கடமைகளை விதிப்பதேயாகும்' என விளக்குகின்றார். விதிகளும் விலக்குகளுமே வேத மூலத்தின் முதன்மையான பகுதிகளாக அமைகின்றன. வேதத்தின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதன் மூலமே ஒரு மனிதன் நலம் பெற முடியும். சபரர் என்பவர் ஜைமினி சூத்திரங்களுக்கு ஓர் உரை வகுத்தார். அவ்வுரையானது, தென்னிந்தியர்கள் என்று பொதுவாக நம்பப்படுகின்ற புகழோங்கிய இரு பெருங் கல்வியாளர்களால், இருவேறு வகைகளில் விரித்துரைத்து விளக்கப் பெறுகின்றது. அவர்களில் ஒருவர், குமாரிலபட்டர். அவர் சங்கரரின் காலத்தில் வாழ்ந்தவர்; அவரினும் மூத்தவராகத் திகழ்ந்தவர். அவர் பிறப்பால் ஆந்திரர் எனக் கருதப்படுகின்றார். மற்றொருவர், குமாரில பட்டர்க்கு எதிர்மாறான கொள்கையைத் தோற்றிய பிரபாகரர். வழிவழிச் செய்தியின்படி, அவர் வட திருவிதாங்கூரில் தோன்றியவரும், குமாரில பட்டரின் மாணாக்கரும் ஆவர். ஓரோவழி ஆசிரியரைவிட மாணாக்கர்கள் சிறந்துயர்ந்து திகழ்ந்தனர் என்னும் செய்தி, புதுமையானதொன்றன்று. சிறப்பாகத் தென்னாட்டில் இத்தகைய வழக்காறுகள் பலவுண்டு. மீமாஞ்ச தத்துவம் பற்றிக் குமாரிலபட்டரும் பிரபாகரும் கூறிய விளக்கங்களில் முதன்மையான சில வேறுபாடுகள் இருக்கின்றன. அவைகளில், வேதங்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிதற்குரிய நோக்கம் குறித்ததும் ஒன்றாகும். குமாரில பட்டரின் கருத்துப்படி,'அங்ஙனம் கீழ்ப்படிந்தொழுகுதல் தனது விருப்பங்கள் நிறைவேறுதற்கு-துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் எய்துவதற்கு ஒரு கருவியாகும் என்னும் ஞானமே' நோக்கமாகும். பிரபாகரரின் கருத்துப்படி, 'வேதமானது ஆற்றலற்றதொன்றன்று. அது தனது ஆணையிடும் ஆற்றலுக்கு வேறொரு புறப்பொருளின் துணையை நாடி நிற்பதில்லை. ஆதலின் வேதத்திற்குக் கீழ்ப்படிதற்குக் காரணமாய நோக்கம், அவ்வாணைக்கேயுரிய மதிப்பியல் வணக்கமே யாகும். ஒருவனைச் செயலாற்றத் தூண்டுவது கடமையுணர்ச்சி (கார்யதாஞானம்) ஆகுமே யன்றி, விருப்பத்தை நிறைவேற்றும் கருவியைப் பற்றிய அறிவு (இஷ்ட

சாதனஞானம்) அன்று'. இவ்விருதிறக் கொள்கையையும் பற்றி ஏராளமான நூல்கள் தென்னிந்தியாவில் எழுதப் பெற்றுள்ளன. வேதாந்த தேசிகர் போன்ற வேதாந்த ஆசிரியர்களின் வாயிலாக நாத்திகச் சார்புடைய மீமாஞ்சமானது ஆத்திகச் சார்புடைய மீமாஞ்சமாக மாற்றுருவம் பெற்றுள்ளது. சாயனர் வேதத்திற்கு வகுத்த உரை நன்கறியப்பட்டதொன்று. அவர்தம் உடன் பிறந்தவராகிய மாதவர் மீமாஞ்ச சூத்திரங்களுக்கு விளக்கம் எழுதினர். இவ்விருவரும் விஜய நகர அரசைத் தோற்றுவித்தவர்களால் ஆதரிக்கப் பெற்ற பெருங்கல்வியாளர்கள் ஆவர். தென்னிந்தியக் கோயில்களிலும் வீடுகளிலும் நடத்தப் பெறும் வழிபாடுகளில், வேத மந்திரங்களை ஓதுதலும், வேதச் சடங்குகளை நிகழ்த்துதலும், சிறந்த பகுதியாகத் திகழ்கின்றன. வேத மந்திரங்களைத் திருத்தமாக ஒலிக்கும் முறையைத் தென்னகம் மிகச் சிறந்த முறையிற் போற்றிப் பொதிந்து காத்து வந்துள்ளதென்னும் உண்மை, அனைவரும் உடன்படுவதொன்று.

4. **வேதாந்தம்:** மீமாஞ்ச தத்துவ வளர்ச்சிக்கும், வேத மந்திரங்களை ஓதுதலுக்கும், வேதச் சடங்குகளை நிகழ்த்தும் பயிற்சிக்கும், தென்னகம் செலுத்திய நன்கொடைப் பங்கு எத்துணைப் பெரியதொன்றாக இருந்து வந்திருக்கின்றதோ, அதனைவிடப் பெரிய அளவில் தென்னகத்தின் தனிப் பெருஞ் சிறப்பு, வேதாந்தத் துறையில் மிகவும் விளங்கித் திகழ்கின்றது. 'வேதாந்தம்' என்னும் சொல்லைக் குறித்த அளவிலேயே, கேரள நாட்டில் காலடி என்னும் இடத்தில், பேரறிஞர்கள் பலர் கருதுகின்றபடி கி. பி. 788—820-இல், தோன்றி வாழ்ந்தருளிய சங்கரரை ஒருவன் நினைவு கூர்வான். சங்கரரால் அறிவுறுக்கப்பெற்ற குறித்ததொரு வடிவமுடைய வேதாந்தமானது 'அத்வைதம்' என வழங்கப் பெறும். உபநிடதங்கள் எத்துணைப் பழமையுடையனவோ அத்துணைப் பழமையை அஃதுடையதாகும். சங்கரர் தமது 'இரண்டில்லாத' ஏகான்ம வாதத்தினை, முதன்மையான உபநிடதங்களுக்கும், வாதராயணரின் பிரமசூத்திரத்திற்கும், பகவத்கீதைக்கும் தாம் இயற்றிய உரைகளில் மட்டுமேயன்றி

உபதேச சஹஸ்ரீ, விவேக சூடாமணி போன்ற வேறு பிற நூல்களிலும் விளக்குகின்றார். 'உபநிடதங்களில் முடிந்த பொருளாகக் குறிப்பிடப்பெறும் பிரம்மம் அல்லது ஆத்மா என்ற ஒன்றே உள்ளது. அதுவே முழுமையானது. உலகம் பல வகையாகத் தோன்றினும், அது வெறும்மாயை அல்லது பொய்த்தோற்றமே. தனி உயிர் என்று சொல்லப்படுவது பரப்பிரம்மமேயன்றி வேறன்று' என்பதே, சங்கரர் கூறும் கொள்கையின் சாரமாகும். சங்கரர்க்கு முன்பே வேதாந்திகளும், அத்வைதிகளும்கூட இருந்தனர். அவர்களில் ஒருவர், தாம் தென்னாட்டிற் பிறந்தவராதலைக் குறிக்கும் வகையில், 'திரமிடா' அல்லது 'திராவிடாசார்யா' என்னும் பெயரைப் பெற்றிருந்தார். சங்கரரும், சங்கரர்க்குப் பின்னேதோன்றி 'விசிட்டாத்வைதம்' என்னும் வேதாந்தக் கொள்கையைத் திருத்தமுற வகுத்த இராமாநுஜரும் ஆகிய இருவராலும், அவர் மிக்க பெருமதிப்புடன் குறிப்பிடப் பெறுகின்றார். சங்கரர்க்கு முன்னே விளங்கிய மற்றோர் அத்வைதி, சங்கரரின் ஆசிரியர்க்கு ஆசிரியர் என்று வழிவழிச் செய்தி கூறுகின்ற கௌடபாதர் ஆவர். ஆயினும், அத்வைதக் கொள்கையை முதன் முதலில் விரிவும் தெளிவும் மிக்க முறையில் விளக்கியவர் சங்கரரே. வேதாந்தத்தின் அடிப்படை நூல்களாகிய உபநிடதங்கள்-பிரம்மசூத்திரம்-பகவத்கீதை ஆகிய மூன்றிற்கும் சங்கரர் வகுத்த உரைகள் அவற்றின் கருத்துத் தெளிவும் ஆழமும் குறித்துப் பொருந்திய முறையிற் புகழ்ந்து போற்றப்படுகின்றன. அவர் காலத்திற்கு முன்னரே உரை நூல்கள் பல இயற்றப்பெற்றிருந்தும், அவற்றுள் ஒன்று தானும் நின்று நிலவவில்லை. மேலும், சங்கரர்க்குப் பின்னேபோந்த வேதாந்திகள் அனைவரும், அறிந்தோ அறியாமலோ, அவர் அமைத்த மாதிரியினையே பின்பற்றுவாராயினர். சங்கரரின் நேர்முக மாணவர்களுள் ஒருவராகிய சுரேஸ்வரர், ஒத்த கருத்தே அமைந்த மேற்கோள்களைக் கௌடபாதர் சங்கரர் ஆகிய இருவர் நூல்களிலும் இருந்து எடுத்துக்காட்டித் தம்முடைய ஆசிரியரை இயற்பெயரலன்றித் 'தென்னாட்டில் தோன்றியவர்' என்னும் பொருளில்,

'திராவிடா' என வழங்கியிருப்பது குறிப்பிடத்தகும் சிறப்புடைய செய்தியாகும்.

சங்கரர் ஒரு சிறந்த தத்துவ ஆசிரியராகவும், பேரறிஞராகவும், முனிவராகவும் திகழ்ந்தார். அதனோடு மட்டுமேயன்றி இந்து சமுதாயத்தின் ஆற்றல்மிக்க அமைப்பாளராகவும், அஞ்சாமை வாய்ந்த சீர்திருத்தக்காரராகவும் விளங்கினார். அவர் இந்நிலவுலகில் வாழ்ந்த ஆண்டுகள் சிலவே எனினும், அவற்றை அவர் இந்தியாவின் இடையறாத் தொண்டிற்கே உரிமையாக்கினார். நாட்டின் ஒரு முனையில் இருந்து மறுமுனைவரையில் அவர் பலமுறை நடந்துசென்று, தூய உயரிய வாழ்க்கைக்குத் திரும்புமாறு மக்களுக்குப் போதனை செய்தார். இந்து மதத்தின்கண் நுழைந்திருந்த மறுக்களையெல்லாம் அகற்றினார். சமயக் கொள்கைகளைத் தூய்மையுற நிலைநாட்டினார். திருக்கோயில்களோடு இணைத்தெண்ணும் வகையில் ஏற்பட்டிருந்த இழுக்குகளையெல்லாம் போக்கித் துப்புரவாக்கி, அத் திருக்கோயில்கள் எந்த நோக்கங்கள் குறித்து அமைக்கப்பட்டனவோ, அவைகள் நிறைவேறுமாறு செய்தார். நாட்டின் முக்கியப் பகுதிகளில் சமுதாயத்தின் ஆன்மீக நலங்களைப் போற்றிப் பாதுகாக்கும் திருமடங்களை நிறுவினார். அவைகளில் ஐந்து திருமடங்கள் மிகவும் முதன்மையானவை. இமயமலைச் சாரலில் உள்ள பதரி ஒன்றைத் தவிர, ஏனைய நான்கும் இந்திய தீபகற்பப் பகுதியில், பூரி துவாரகை சிருங்கேரி காஞ்சி என்னும் இடங்களில் அமைந்துள்ளன. காஷ்மீரத்தில் இருந்து கன்னியாகுமரி வரையில், சங்கரர் செய்தருளிய புரட்சியின் நலஞ்சிறந்த விளைவுகளை, இந்தியாவிற் பயணஞ்செய்கின்றவரும் இன்றுகூடக் காணலாம்.

**5. விசிட்டாத்வைதம்:** அத்வைதத்தின் வேறாக, நன்கறியப்பட்ட வேதாந்தத்தின் வேறு இருதிறக் கொள்கைகள், விசிட்டாத்வைதமும் துவைதமும் ஆகும். அவைகள் முறையே இராமாநுஜரோடும் மத்வரோடும் தொடர்புறுத்தப் படுகின்றன. அவர்களும்கூடத் தென்னிந்தியரேயாவர். இராமாநுஜர் தோன்றியருளிய ஸ்ரீபெரும்பூதூர் சென்னைக்கு

அன்மையிலேயே உள்ளது. சங்கரர்க்குப் பின்னர் இரண்டு நூற்றாண்டுகள் கழித்துத்தோன்றிய இராமாநுஜர், 'பிரம்மம் நிர்க்குணம்' 'பிரபஞ்சம் மித்தை' என்னும் அத்வைதக் கொள்கையை ஏற்றுக்கொள்ள மறுத்தார். இராமாநுஜர் கொள்கையின்படி, உயிர் உடலோடு தொடர்பு கொண்டிருப்பதுபோல, பிரம்மமானது உயிர்ப் பொருள்களோடும் உயிரில் பொருள்களோடும் கலந்துள்ளது. உணர்வுடைப் பொருள்களாகிய ஜீவன்களும், உணர்வில் பொருள்களாகிய அசித்துக்களும், பிரம்மத்திற்கு விசேஷணமாக விளங்குகின்றன. பிரமம் இவற்றின் விசிட்டப் பொருளாக விளங்குகின்றது. அதுபற்றியே, இராமாநுஜரின் வேதாந்தம் 'விசிட்டாத்வைதம்' என வழங்கப் பெறுகின்றது. பாஞ்சராத்திர ஆகமங்களையும், தென்னாட்டு வைணவ சமயச் சான்றோர்களாகிய ஆழ்வார்கள்-தமக்கு முற்பட வாழ்ந்திருந்த நாதமுனிகள் ஆளவந்தார் ஆகியவர்களின் உபதேசங்களையும் பின்பற்றி, இராமாநுஜர் பிரம்மத்தினை விஷ்ணு-நாராயணன் என வழங்கினர். பக்தி நெறிக்கு அவர் நுண்ணிய அறிவு அடிப்படையை உதவினர். அவர்தம் உபதேசங்களிலிருந்து வடநாட்டிற் பல பக்தி இயக்கங்கள் உணர்வெழுச்சிபெற்றன. அவர்தம் வாழ்க்கையில் மனத்தை மிகவும் உருக்கத் தக்க நிகழ்ச்சிகளில் ஒன்று, ஸ்ரீ நாராயண மந்திரத்தைத் தம் ஆசிரியரின் கட்டளைக்கும்கூட மாறாக, மக்களெல்லாருக்கும் வெளிப்படையாக வழங்கிய செய்தியாகும். மிகப் பெரிய அருட்கொடை என்று தாம் கருதியதனை, மக்களெல்லாருக்கும் வழங்கியதன் இன்றியமையா விளைவாகத் தாம் நரகத்திற்குச் செல்ல நேருமெனினும், அவர் அதற்காகத் தயங்காமற் சமைவாகவே இருந்தார்.

6. துவைதம்: கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் இறுதியில், உடுப்பிக்கு அருகில் தோன்றிய மத்வர், இராமாநுஜரைவிடச் சங்கரரோடு பெரிதும் மாறுபட்டார். அவர் வேதாந்தத்தை முழுவதும் பன்மை (அத்யந்தா பேத வாதம்) ஆக விளக்கினர். 'துவைதம்' என வழங்கும் மத்வர் கொள்கையின்படி, கடவுள் உலகம் உயிர்கள் என்

ய்ன ஒன்றோடொன்று முற்றிலும் வேறுபட்டவையாகும். ஓர் உயிரானது தான் அடைவதற்கு மிகப்பெரிய தொன்ருக எதிர்பார்க்கக்கூடிய நன்மை கடவுளுக்கு அடிமையாகும் நிலேயேயாகும். இராமாநுஜரைப் போலவே, மத்வரும் விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொள்ளுகின்றார். தென்னிந்தியாவில் எங்கோ ஓரிடத்தில் இயற்றப்பெற்றதாக நம்பப்படும் பாகவத புராணத்தால் மிகப்பெரிதும் கவரப் பெற்ற மத்வர், கிருஷ்ண வழிபாட்டு நெறியைப் பரப்பினர். வங்காளத்தில் எழுந்த சைதன்யரின் இயக்கமானது, தனது பிற்பகுதியில் மத்வரின் பன்மைக் கொள்கையையே பின் பற்றத் தேர்ந்துகொண்டது.

**7. துவைதாத்வைதம் :** வைணவ சமயத்தின் பிற தத்துவக் கொள்கைகளுள், தென்னிந்தியரால் தோற்றுவிக் கப்பெற்ற இரண்டை ஈண்டுக் குறிப்பிடலாம். பதினென் ரும் நூற்ருண்டில் தோன்றியவரும், தெலுங்கரும், வடக்கே யுள்ள பிருந்தாவனத்தைத் தமது வாழ்க்கையிடமாகக் கொண்டவரும் ஆகிய நிம்பார்க்கர் 'துவைதாத் வைதம்' என் னும் வேதாந்தக் கொள்கையைத் தோற்றுவித்தார். அவர் பிரம்ம சூத்திரத்திற்கு உரையியற்றினர். அதன்கண் உயிர் களும் உலகமும் ஆகிய இரண்டும் பிரம்மத்திேைடு வேறு பட்டும் வேறுபடாதும் இருக்கின்றன என்றும், பிரம்மம் என்பது இராதையோடு கூடிய கோபாலகிருஷ்ணனே என்றும் விளக்கினர்.

**8. சுத்தாத்வைதம் :** வைணவ சமயத்தின் மற் ருெரு பிரிவு 'சுத்தாத்வைதம்' ஆகும். அது பதினேந்து பதினரும் நூற்ருண்டினரும், தெலுங்கராய்ப் பிறந்து காசி யில் வாழ்ந்தவரும் ஆகிய வல்லபாசாரியருடன் தொடர் புடையது. நிம்பார்க்கரைப்போல, அவர் வேருெரு கிருஷ்ண வழிபாட்டு நெறியைத் தொடங்கினர். வல்லபாசாரியர் கொள்கையின்படி, பிரம்மத்திற்கும் உலகத்திற்கும் உள்ள தொடர்பு, நிம்பார்க்கர் கூறுவதுபோல வேறுபாடும்-வேறு பாடின்மையும் உடையதன்றி, வேறுபாடின்மை யொன்று மட்டுமே கொண்டதாகும். வல்லபர் தம்முடைய அத்வை

தத்தை, உலகத்தை வெறும் மாயை எனக் கூறுதலினுற் களங்கமுற்றதாகத் தாம் கருதும் சங்காரின் அத்வைதத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டத் தூய (சுத்த) அத்வைதம் என அழைக்கின்றார்.

9. சைவசித்தாந்தம்: வைணவ சமயத் தத்துவக் கொள்கைவகைகளைப்போலவே, அவற்றிற்கு நிகராக ஆற்றல் மிக்க சைவக் கொள்கைகள் தென்னிந்தியாவில் இருக்கின்றன. இவைகளில் மிகவும் முதன்மைவாய்ந்தவை சைவ சித்தாந்தம், வீரசைவம், சிவாத்வைதம் என்பனவாகும். வைணவத்திற்கு வைணவ ஆகமங்கள் இருப்பதுபோலவே, சைவத்திற்கும் சைவ ஆகமங்கள் இருக்கின்றன. சைவத்தின் தமிழ் வகையைச் சார்ந்த சைவ சித்தாந்தமானது சைவ ஆகமங்களை மட்டுமேயன்றி, 'நாயன்மார்கள்' எனப்படும் தென்னகச் சைவச் சான்றோர்களின் உபதேசங்களையும் தனது கொள்கைகளுக்கு அடிப்படையாகக் கொண்டுள்ளது. இதன் அடிப்படைப் பிரமாணநூல் பதின்மூன்றும் நூற்றாண்டினராகிய மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதம் ஆகும். அருணந்தி சிவாசாரியரின் சிவஞான சித்தியார், உமாபதி சிவாசாரியரின் சிவப்பிரகாசம் திருவருட்பயன் என்பன, இக்கொள்கையைச் சார்ந்த வேறு பிற முக்கியமான நூல்களாகும். கடவுள் (பதி) உயிர் (பசு) ஆணவம் கன்மம் மாயை என்னும் தளை (பாசம்) ஆகிய முப்பொருள்களும் உள்பொருள்கள் என்பது, சைவசித்தாந்தத்தின் முதன்மையான கொள்கையாகும். 'கடவுள் சிவம், அவரே பரம்பொருள், உயிர்கள் சிவத்தின் இயல்புகளுடையவை, ஆனால் சிவத்திற்குச் சமமானவை அல்ல. 'அத்வைதம்' என்பது கடவுளோடு வேறுபாடின்மை யன்று, கடவுளினின்று பிரியாமையே. இதுதான் உண்மையான அத்வைதம் ஆகும்' என்று சைவ சித்தாந்தம் சாற்றுகின்றது.

10. வீரசைவம்: இரண்டாவதாக, நாம் கருதத் தக்க சைவக் கொள்கையானது, வீரசைவம் ஆகும். மிகத் தொன்னெடுங் காலத்திலேயே தோன்றிய தொன்றாக, அது தன்னைச் சுட்டிக் கொள்கிறது. கல்யாணியில் விளங்கிய

கலாசூரி பிஜ்ஜல அரசரின் முதலமைச்சராகத் திகழ்ந்த பசவர் என்பரால், கன்னட நாட்டில், 12-ஆம் நூற்றாண்டில் அது மக்களிடையே பெரிதும் பரப்பப் பெற்றது. வீர சைவம் என்னும் சொல் "உறுதிப்பாடுடையவர்களின் சைவம்" அல்லது "செயலாண்மைத் திறச் சைவம்" என்னும் பொருளுடையது. அதனைப் பின்பற்றுபவர்கள் தம் உடம்பில் இலிங்கத்தை அணிந்து கொள்ளுதலால், அஃது 'இலிங்காயதம்' எனவும் வழங்கப் பெறுகின்றது. வேத ஆகம புராணங்களை மட்டுமேயன்றி, 'புராதனர்கள்' எனத் தாம் போற்றும் தமிழ்ச் சைவ அடியார்களையும், 'வசனங்கள்' எனப்படும் கன்னட சமயப் பெரியார்களின் உபதேசங்களையும் வீரசைவர்கள் பிரமாணமாகக் கொள்கின்றனர். கலைக் குறியீட்டின்படி, வீரசைவத் தத்துவக் கொள்கையானது 'சக்தி - விசிட்டாத்வைதம்' என வழங்கப் பெறும். 'கடவுளின் இரண்டல்லாத் தன்மையாவது தனது ஆற்றல் அல்லது சக்தியினால் விசேடிக்கப்படுதல்' என்பது அதன் பொருளாகும். இத்தத்துவ முறையின்படி, தன்னின் வேறல்லாத ஆற்றல் அல்லது சக்தியினால், கடவுளும் உயிர்களும் தனித் தனியே பிரிக்கவியலாத நிலையில் ஒன்றியுள்ளன. இங்ஙனம் ஒன்றியுள்ள நிலையை உணர்ந்துய்வதே வாழ்க்கையின் குறிக்கோள். இதனை லிங்கமும் (சிவமும்) அங்கமும் (உயிரும்) ஒருமைப்படுதல் என்னும் கருத்தில் 'லிங்காங்க சமரஸ்யம்' எனக் கூறுகின்றனர்.

**11. சிவாத்வைதம்:** சிவாத்வைதக் கொள்கையானது, இராமாநுஜரோடு ஒரு காலத்தவராக வாழ்ந்திருக்கக்கூடிய ஸ்ரீகண்டரால் வகுக்கப் பெற்றது. சங்கரரின் அத்வைதக் கொள்கையோடு இது பெரிதும் நெருங்கிய நிலையில் வருகின்றது. பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பைய தீட்சிதர் தம்முடைய பல நூல்களில், சைவமும் அத்வைதமும் ஆகிய இரு கொள்கைகளையும் ஒருமைப்படுத்த முயன்றுள்ளார். 'பிரமசூத்திரத்திற்கு ஸ்ரீகண்டர் வகுத்த உரையில் ஓரோவழி மந்த மதியினராகிய மக்களின் நலங்கருதி விசிட்டாத்வைதத்தை உபதேசிப்பதாகத் தோன்றிய போதி

னும், அவருடைய தத்துவக் கொள்கையின் சாரம் அத்வைதமேயாகும்' என அப்பைய தீட்சிதர் கூறுகின்றார். ஸ்ரீ கண்டர் பிரம்மப் பொருளைச் சிவம் நீலகண்டம் உமாசகாயம் திரிநேத்ரம் என ஒற்றித்துக் காண்கின்றார். சிவம் மங்களத் தன்மை வாய்ந்தது. நீலகண்டம் உயிர்கள்பாற் கொண்டுள்ள பேரருளுக்கு அறிகுறியாக நிற்பது. உமாசகாயம் ஞானமும் ஆனந்தமும் ஆகிய ஒப்புயர்வற்ற ஒளியாகத் திகழ்வது. திரிநேத்ரம் உலகங்களை யெல்லாம் முத்தொழிற் படுத்தும் பேராற்றலை உணர்த்துவது. சுவேதாஸ்வதர உபநிடத சுலோகம் ஒன்றை மேற்கோளாக எடுத்துக்காட்டி, 'ஒருவன் சிவபரம் பொருளை உணராமல் வீடுபேறு அடைவதென்பது வானத்தை ஒரு தோல்போலச் சுருட்ட முயலுவதைப் போன்று முடியாததொரு செயல்' என ஸ்ரீகண்டர் கட்டுரைக்கின்றார்.

"பரசிவன் உணர்ச்சி இன்றிப்
பல்லுயிர்த் தொகையும் என்றும்
விரவிய துயர்க்கீ றெய்தி
வீடுபேறு அடைதும் என்றல்,
உருவமில் விசும்பின் தோலை
உரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை இயம்பிற் றென்னில்
பின்னுமோர் சான்றும் உண்டோ ?"

**12. ஜைன பௌத்தம்:** இனி, இவ்வைதிக நெறிகளுக்குப் புறம்பான கொள்கைகளை நோக்குவோமாயின், ஒரு சில காலம் தென்னகத்தில் ஜைனமும் பௌத்தமும் பெரும்பாலான மக்களாற் பின்பற்றப் பெற்றமையையும், இந்துமதத்தில் தோன்றிய சீர்திருத்த இயக்கத்தாலும் - சைவ வைணவ ஆசிரியர்களின் அருளுரைகளாலும் அவைகள் அடுத்து விரைவில் அழிவுநிலை எய்தியமையையும் அறியலாம். ஜைன பௌத்த ஆசிரியர்கள் தாம்இயற்றிய நூல்களின்மூலம், தென்னிந்திய மொழிகளின் இலக்கியங்களைச் செழிப்புறச் செய்துள்ளனர். மிக விரிவான நீதிக் கோட்பாடுகளை யுடையதும்,

உலகப் பெருநூலாகி யிருப்பதுமான திருக்குறளை இயற்றிய ஆசிரியர் திருவள்ளுவர், ஜைனர் பௌத்தர் சைவர் வைணவர் ஆகிய எல்லாராலும் ஒருசேரத் தத்தமக் குரியவராகக் கொண்டாடப்படுகின்றார். சாத்தனார் இயற்றிய மணிமேகலை என்னும் பௌத்தத் தமிழ்நூலில், அதன் கதைத் தலைவி யாகிய மணிமேகலை, வேதம் சைவம் வைணவம் ஆஜீவகம் ஜைனம் சாங்கியம் வைசேடிகம் லோகாயதம் முதலிய சமய வாதங்களைக் கேட்டறிந்து உணர்ந்து கொள்ளுமாறு பணிக்கப்படுகின்றாள். புகழ்பெற்ற திக்நாகர் என்னும் பௌத்த தருக்கநூல் ஆசிரியரைத்தோற்றுவித்தும்,தருமபாலர் என்பவரைக் கி. பி. ஆறும் நூற்றாண்டில் நலாந்தா பல்கலைக் கழகத்திற்குத் தலைவராக அனுப்பி வைத்தும், "கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகர்" இணையற்ற தனிப்பெருஞ் சிறப்பை எய்தியுள்ளது. ஜைனர்கள் கருநாடகத்தில் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தனர். கன்னட மொழியில் ஜைனர்கள் இயற்றிய நூல்கள் பலப்பல இருக்கின்றன. அவைகளிற் பல, தீர்த்தங்கரர்கள் - ஜைன சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை விளக்குவனவாகும். ஒருசில காலம் மதுரை மாநகரம் ஜைனர்களின் கோட்டையாக விளங்கியது. அந்நகரிற் கி.பி. 470-இல் வச்சிரநந்தி என்பவனால் ஒருசங்கம் அமைக்கப்பட்டதென நாம் கேள்விப்படுகின்றோம்.

**13. தென்னாட்டுச் சமயச் சான்றோர்கள்:** இந்தியாவில் தத்துவமானது சமயத்தோடு பெரிதும் தொடர்புடையதாக உள்ளது. தத்துவ ஆசிரியர்களே சமயத் தலைவர்களாகவும் கருதப் பெறுகின்றனர். இதுவரையிற் குறிப்பிடப்பெற்ற தத்துவ ஆசிரியர்கள் ஒவ்வொருவரும், மாட்சிமை மிக்க சமயத் தலைவர்களாகவும் விளங்கினர். தென்னிந்தியச் சைவ வைணவ சமய ஆசிரியர்களைப் பற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளோம். தென்னகச் சைவ சமயச் சான்றோர்கள் எனப் போற்றப்படுவோர் அறுபத்துமூவர் ஆவர். 'தலைவர்கள்' என்னும் பொருளில் அவர்கள் 'நாயன்மார்கள்' என அழைக்கப்படுகின்றனர். அவர்களில் மிகவும் முதன்மை வாய்ந்தவர்கள் ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க

வாசகர் என்னும் நால்வர்கள் ஆவர். இவர்கள் நால்வரும் அருளுணர்வு பெற்ற சிறந்த கவிஞர்களாக விளங்கி, நாட்டிற் பக்திவெள்ளம் பெருக்கெடுத் தோடச் செய்து, மக்கள் மனத்தில் ஆன்மீக வாழ்க்கைக்குரிய பண்பாட்டை உண்டாக்கினர். வைணவ சமயப் பெரியார்கள் பன்னிருவர்கள் ஆவர். 'தெய்வ அருளில் ஆழ்ந்து திளைப்பவர்கள்' என்னும் பொருளில், அவர்கள் ஆழ்வார்கள் எனச் சிறப்பித்து ஓதப் படுவர். அவர்களில் தலைசிறந்தவர் ஆகிய நம்மாழ்வார் பிறவியிலேயே ஒரு யோகியாவர். அவர் அருளிச் செய்த கவிதைநூல் ஆகிய திருவாய்மொழி, வேதாந்த தேசிகரால் 'திராவிட உபநிடதம்' எனப் போற்றப்பட்டுள்ளது.

கருநாடகத்திற் பரவிய வீரசைவமானது பல அருளாளர்களைத் தோற்றுவித்தது. அவர்கள் அக்கொள்கையை மக்கள் அனைவரும் தழுவும் வகையிலும், கவர்ச்சிமிக்க முறையிலும் விளக்கிப் பரப்பினர். அத்தகையோர் இரு நூற்றுக்கும் மேற்பட்டவர்களாவர். அவர்களில், அவர்களுக்குத் தலைமைநிலையில் விளங்கிய அக்கமாதேவி என்னும் பெண்பாலாரும் ஒருவர். வீரசைவப் பெரியார்கள் இயற்றிய நூல்கள் 'வசன சாத்திரங்கள்' என்னும் தொகுதிப் பெயரால் வழங்கப்படுகின்றன. கன்னட நாட்டில் மிகமிக எளிய சிறு வீடுகளிலும்கூட, இந்நூல்கள் பெரிதும் போற்றிப் படிக்கப்பட்டு வருகின்றன. இந்த வசன நூலாசிரியர்களின் பொருள் பொதிந்த சிறுசிறு தொடர்கள், மக்களின் பேச்சு வழக்கில் இயல்பாக அடிக்கடி வழங்கப்படும் நிலையில் பெரிதும் பிரிவறக் கலந்துவிட் டிருக்கின்றன. இந்நூல்களில் அடுத்தடுத்து வற்புறுத்திக் கூறப்படும் ஒரே பொருள், 'மனிதர்காள்! பாவ வழியினின்று திரும்புங்கள், சிவபிரானைச் சரண் அடையுங்கள்!' என்பதேயாகும்.

கன்னட நாட்டில் வைணவ சமயமானது அரிதாசர்களின் இயக்கத்தை எழுச்சியுறச் செய்தது. அரிதாசர்களில் மிகவும் தலைசிறந்தவர் புரந்தரதாசர். அவர் ஒரு சிறந்த கவிஞரும் பக்தரும் ஆவார். கன்னட மொழியில் அவர் இயற்றிய எளிய இனிய 'பதங்கள்', கடவுள் அன்பையும் கடவுட்

காதலையும் அளவின்றி ஏராளமாகப் பொழிவனவாகும். இத்தகைய ஓர் இயக்கம் மகாராட்டிரத்திலும் கால்கொண்டது. ஞானதேவர், நாமதேவர், ஏகநாதர், துக்காராம், இராமதாசர் முதலினோர், அவ்வியக்கத்தோடு தொடர்புடையவர்கள்.

'சித்தமார்க்கம்' எனப்படும் தனிச் சிறப்புடைய அருளியற் கொள்கை ஒன்று, தென்னகத்தில் நிலவிக்கொண்டு வருகின்றது. தென்றமிழ்ச் சைவ சமயத்தின் மிகச் சிறந்த தெய்விக நூலாகத் திகழ்ந்துவரும் திருமந்திரம் என்னும் நூலை அருளிச் செய்த திருமூலர், ஒரு பெருஞ் சித்தர் ஆவர். வழிவழிச் செய்தியின்படி, கயிலையில் இருந்து தெற்கு நோக்கி வந்த ஒரு சிவயோகியாகிய அவர், இறந்துபோன மூலன் என்னும் இடையன் ஒருவனின் உடலைக் கண்டார். பசுக்களின் துயரை நீக்கும் பெருங்கருணையினால் அவ்வுடலிற் புகுந்தார். மூவாயிரம் யாண்டுகள் யோகம் இருந்து, திருமந்திரத்தின் மூவாயிரம் பாடல்களையும் இயற்றினார். மனித உடலை அழியாமற் (காயகற்பம்) செய்துகொள்ள இயலும் என்பது, சித்தர் நெறியின் தனிச் சிறப்பான ஒரு கொள்கையாகும். தனது பிறிதொருபகுதியாக இந்நெறி, வடநாட்டு "அடயோக நெறி"யைப் பெற்றுளது.

**14.** முடிவுரை: அண்மையிற் சில நூற்றாண்டுகளிலும், நாம் வாழும் இந்நாளிலும்கூட, புகழ்மிக்க ஞானிகளையும் முனிவர்களையும் தென்னகம் தோற்றுவித்துள்ளது. அவர்களில் தாயுமானவர், சதாசிவப்பிரம்மம், தியாகராஜர், இராமலிங்க அடிகள், நாராயணகுரு, ரமணமகரிஷி முதலினோர் ஒரு சிலர் ஆவர். "அன்றைய இந்தியாவையும், என்றுமுள்ள இந்தியாவையும் மறுபடியும் ஒருவன் அவர்களிற் சந்திக்கின்றான்" என, அண்மைக் காலத்தின் மேலைநாட்டு எழுத்தாளர் ஒருவர், கடைசியாகக் குறிப்பிடப் பெற்ற முனிவர் அவர்களைக் குறித்துக் கூறியிருப்பது, ஏனையருக்கும்கூடப் பொருந்துவதாகும்.

---

# திருப்பாசூர்

["சைவநெறிக் காவலர்"-டாக்டர்-திரு. மா. இராசமாணிக்கனார் அவர்கள், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி.]

தல வரலாறு: இது தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று; இது சென்னைக்கு மேற்கில் 20 கல் தொலைவில் உள்ள திரு எவ்வுளூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கில் நாலரைக்கல் தொலைவில் உள்ளது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் இக்கோவிலை வழிபட்டுத் திருப்பதிகம் பாடியுள்ளார்.

" படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே "

என்பது அவர் வாக்கு.

இங்குச் சிவபெருமான் ஒரு மூங்கிலின் அடியில் தோன்றியருளினார் என்பது தலவரலாறு. கரிகாற்சோழன் குறும்ப அரசர்களை அடக்கித் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான். அப்பொழுது குறும்ப அரசன் ஒருவனுக்காகச் சமணர்கள் ஒரு பெரும் பாம்பைக் குடத்தில் விட்டுச் சோழனிடம் அனுப்பினர். சிவபெருமான் அச்சோழனுக்கு உதவியாகச் சென்று சமணரால் அனுப்பப்பட்ட பாம்பை எடுத்து ஆட்டிச் சோழனைத் தீங்கினின்றும் காத்தருளினார் என்பது தலபுராணம் கூறும் செய்தியாகும்.

கல்வெட்டுக்கள்: அப்பரால் பாடப்பெற்ற தலமாதலின், இது கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் சிறப்புற்றிருந்தது என்பது தெளிவாகும். எனவே, இது, கி. பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் இன்றுவரையும் இருந்துவரும் திருத்தலமாகும். இது பல்லவர் காலத்திலும் பிற்காலச் சோழர் காலத்திலும் விசயநகரவேந்தர் ஆட்சிக் காலத்திலும் சிறப்புற்றிருந்தது என்பதை இத்தலத்துக் கோவில் கல்வெட்டுக்கள் நன்கு உணர்த்துகின்றன. இக்கோவிலில் 53 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை முதல் இராசராச சோழன் (கி. பி. 985—1014) காலம் முதல் வீரகம்பணவுடையார் (கி. பி. 1550) காலம் வரையில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்களாகும்.

**கல்வெட்டுக்களிற் கண்ட அரசர்கள்:**

| | |
|---|---|
| முதலாம் இராசராசன் | கி. பி. 985—1014 |
| இராசேந்திர சோழ தேவன் | கி. பி. 1052—1064 |
| வீரராசேந்திரன் | கி. பி. 1063—1070 |
| அதிராசேந்திரன் | கி. பி. 1068—1070 |
| முதற் குலோத்துங்கன் | கி. பி. 1070—1122 |
| விக்கிரம சோழன் | கி. பி. 1122—1135 |
| மூன்றும் குலோத்துங்கன் | கி. பி. 1178—1218 |
| மூன்றும் இராசராசன் | கி. பி. 1216—1246 |
| விசயகண்ட கோபாலன் | கி. பி. 1178—1218 |
| வீரப்பிரதாப தேவராய மகாராயர் | கி. பி. 1427—1440 |
| அச்சுத மகாராயர் | கி. பி. 1537 |
| வீரகம்பண உடையார் | கி. பி. 1551 |

**வரலாறு:** சங்க காலத்தில் தொண்டை நாடு இருபத்துநான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு கோட்டத்திற்கும் ஒரு தலைநகர் இருந்தது. அத்தலைநகரில் கோட்டை இருந்தது. ஒவ்வொரு கோட்டத்திலும் குறும்பர் தலைவன் ஒருவன் ஆண்டுவந்தான் என்று கூறலாம். கீழ்வருவன இருபத்துநான்கு கோட்டங்களாகும்.

(1) புழல் கோட்டம், (2) ஈக்காட்டுக் கோட்டம், (3) மணவூர்க் கோட்டம், (4) செங்காட்டுக் கோட்டம், (5) பையூர்க் கோட்டம், (6) எயில் கோட்டம், (7) தாமல் கோட்டம், (8) ஊற்றுக்காட்டுக் கோட்டம், (9) களத்தூர்க் கோட்டம், (10) செம்பூர்க் கோட்டம், (11) ஆம்பூர்க் கோட்டம், (12) வெண்குன்றக் கோட்டம், (13) பல்குன்றக் கோட்டம், (14) இலங்காட்டுக் கோட்டம், (15) கலியூர்க் கோட்டம், (16) செங்கரைக் கோட்டம், (17) படுவூர்க் கோட்டம், (18) கடிகூர்க் கோட்டம், (19) செந்திருக்கைக் கோட்டம், (20) குன்றவட்டான கோட்டம், (21) வேங்கடக் கோட்டம், (22) வேலூர்க் கோட்டம், (23) சேத்தூர்க் கோட்டம், (24) புலியூர்க் கோட்டம்.

குறும்பர் ஆட்சிக்குப் பிறகு தொண்டை நாடு திரையர் ஆட்சிக்கு உட்பட்டது. வடதொண்டை நாட்டைத் திரை

யன் என்பவன் பவத்திரி (இன்றைய கூடூர் வட்டத்திலுள்ள ரெட்டிபாளையம்) என்னும் நகரத்திலிருந்து அரசாண்டான். திரையனின் சார்பாளனாக இளந்திரையன் என்பவன் தொண்டை நாட்டின் தென்பகுதியை ஆண்டு வந்தான். அவனுக்குத் தலைநகர் காஞ்சிபுரம் என்பது. இது சங்க நூல் கூறும் செய்தியாகும்.

கரிகாற்சோழன் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான்- காடு கெடுத்து நாடாக்கினான் என்று பட்டினப்பாலை முதலியன பகர்கின்றன. மணிமேகலை வாழ்ந்த காலத்தில் இளங்கிள்ளி என்பவன் சோழச் சார்பாளனாகக் காஞ்சியில் இருந்து தொண்டை நாட்டை ஆண்டு வந்தான் என்று மணிமேகலைக் காவியம் கூறுகிறது. தொண்டை நாடு ஏறத்தாழக் கி. பி. 300 முதல் 900 வரையில் பல்லவர் ஆட்சியில் இருந்தது. பின்பு கி. பி. ஆயிரத்து முந்நூறு வரையில் சோழப் பேரரசர் ஆட்சியில் இருந்து வந்தது. அதன்பின்பு விசயநகர வேந்தர் ஆட்சியில் இருந்தது என்பன வரலாறு கண்ட உண்மையாகும்.

கி. பி. 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் கருநாடகப் போர்கள் தமிழகத்தில் நிகழ்ந்தன. அக்காலத்தில் திடீர்ப் படையெடுப்புக்கள் பல நடைபெற்றன. அதனால் ஒவ்வொரு கோவிலும் ஒவ்வொரு கோட்டையாகப் பயன்படுத்தப் பெற்றது. உயர்ந்த மதில்கள், அகன்ற திருச்சுற்றுக்கள் அமைந்த கோவில்கள் கோட்டைக்குரிய பாதுகாப்புக்களைப் பெற்றன. சில முக்கிய கோவில்களைச் சுற்றிலும் அகழி வெட்டப்பட்டது. இக்கோட்டைக் கோவில்களுள் கருநாடக நவாபுகளின் படைகளும், பிரெஞ்சியர் படைகளும், ஆங்கிலேயர் படைகளும் மாறிமாறித் தங்கிப் போரிட்டன என்பது வரலாற்றால் அறியப்படும் உண்மையாகும். இத்தகைய கோட்டைக் கோவில்களுள் பாசூர்க் கோவிலும் ஒன்றாகும். ஒரு காலத்தில் இக்கோவிலைச் சுற்றிலும் அகழி இருந்தது என்பதை இதன் இன்றைய நிலையைக்கொண்டு நன்கறியலாம்.

கல்வெட்டுச் செய்திகள்: சோழர் காலத்துத் தமிழகத்தில் கோவில் திருப்பணிகள் மிகுந்து விளங்கின.

பேரரசர், சிற்றரசர், அரசாங்க அலுவலர், உழவர், வணிகர், தேவரடியார் முதலிய பலரும் சைவசமயத் திருப்பணியில் ஈடுபட்டு இருந்தனர். இந்த நிலை திருப்பாசூரிலும் இருந்தது என்பதைப் பல கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

**விளக்குத் தானம்:** கோவிலில் விளக்கு எரிக்க மக்கள் பணம், ஆடுகள், பசுக்கள், எருமைகள், நிலம் முதலியவற்றை வழங்கினர். கோவிலில் விளக்கு எரித்தல் பற்றிய கல்வெட்டுக்களே ஒவ்வொரு கோவிலிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே, விளக்கெரித்தல் சிறந்த அறப்பணியாகக் கருதப்பட்டது என்பது தெரிகிறது அன்றோ?

கோவிலில் பலவகை விளக்குகள் எரிக்கப்பட்டன. அவை (1) சாதாரண விளக்கு, (2) நந்தா விளக்கு, (3) சந்தி விளக்கு எனப் பலவகைப்பட்டன. (1) சாதாரண விளக்கு என்பது பூசை நேரங்களில் மட்டும் ஏற்றப்படும் விளக்கு எனக் கொள்ளலாம்; (2) நந்தா விளக்கு என்பது எப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கும் விளக்காகும்; (3) சந்தி விளக்கு என்பது காலைமாலைச் சந்திகளில் மட்டும் எரிக்கப்படுவது போலும்!

திருப்பாசூர்க் கோவிலில் சாதாரண விளக்குகள் 6 எரிக்கப்பட்டன; நந்தா விளக்குகள் 18 எரிக்கப்பட்டன; சந்தி விளக்குகள் 4 எரிக்கப்பட்டன.

**தான வகைகள்:** இக்கோவிலுக்கு இரண்டு நந்தவனங்கள் உரியனவாக இருந்தன. கோவிலில் ஆனி விழா, மார்கழி, ஆருத்திரா, வைகாசி விழா முதலிய விழாக்கள் நடைபெற்றன. ஞாயிற்றுக்கிழமை சிறப்புப் பூசையும் நிகழ்ந்தது. மார்கழி ஆருத்திராவில் பூசைக்காக முப்பது கண்டகோபாலன் புதுமாடை (அக்கால நாணயம்) கோவிலுக்குக் கொடுக்கப்பட்டது. இத்தகைய விழாக்களுக்காகப் பணதானமும், நிலதானமும் செய்யப்பட்டன. மாகேசுவரர்க்கு உணவளிக்கவும் நிலதானம் செய்யப்பட்டது. அம்மன் திருமஞ்சனத்திற்கும் அலங்காரத்திற்கும் சாம்புவ

ராயன் பொன்தானம் செய்தான். வழிபாட்டிற்கும் கோவி லின் பிறதேவைகளுக்கும் மூன்றாம் குலோத்துங்க சோழன் 95 வேலி நிலத்திற்குரிய வரியைக் கோவிலுக்கு விட்டான். நெல்லூர், நாராயணபுரம், ஆர்க்காடு, மயிலாப்பூர், திருவொற்றி யூர், பூந்தமல்லி, நெடும்பிறை, தமனகச்சேரி, பெருங்களூர், *திருநீறு ஆகிய இடங்களைச் சேர்ந்த வணிகக்குழுவினர் ஈக் காட்டுக் கோட்டத்துக் கைவண்டூர்க் கிராமத்தை விலைக்கு வாங்கித் திருப்பாசூர் இறைவர்க்கு வரியிலித் தேவதான மாகக் கொடுத்தனர். கீழ்மலை மோகூர் நாட்டு அபராசித சதுர்வேதி மங்கலத்துச் சபையார் கோவில் கட்டளைகள் நடைபெற ஏழுவேலி நிலத்தை உதவினர். காலை வழிபாட் டிற்கு நிலவருவாய் தானமாக விடப்பட்டது. திருப்பாசூர்த் தேவரடியாள் ஒருத்தி படையனுக்கும் கோவிலில் இருந்த மகேசுவரர்க்கு உணவளிக்கவும் பணதானம் செய்தாள். மூன் றாம் குலோத்துங்கன் காலத்தில் கோவில் வழிபாட்டுக்கும் கோவிலைப் பழுது பார்க்கவும் சில வரிகள் ஒதுக்கப்பட்டன.

**நகைகள் முதலியன:** பக்தர்கள் இறைவனுக்கும் இறைவிக்கும் பல நகைகள் செய்து அளித்தனர். கடவுளின் கால்விரல் மோதிரம், அம்மனுக்குக் காதணி, கழுத்தணி, திருப்பவித்திரம் (மோதிரம்) முதலியன குறிப்பிடத்தக்கவை. முதற் குலோத்துங்கனது சேனைத் தலைவனான காலிங்கராய னுக்கு மகனான சூரிய நாயகன் என்பவன் பொன்னாலும், வெள்ளியாலும், முத்துக்களாலும் செய்யப்பட்ட மகாதோர ணம், கங்காதேவியின் சிலை, பொற்பூணூல், நூற்றுக்கணக் கான முத்துக்களும் விலையுயர்ந்த கற்களும் பதித்த தங்கத் தட்டு முதலியவற்றைக் கோவிலுக்கு அளித்தான்.

**திருநாவுக்கரசர் மடம்:** திருப்பாசூரில் மூன்றாம் இராச ராச சோழன் காலத்தில் திருநாவுக்கரசா மடம் என்ற பெய ரில் ஒரு மடம் இருந்தது. அதனில் பசுபதி தேவர், விநாயக தேவர் என்ற ஆண்டார் இருவர் இருந்தனர். ஆண்டார் என்பவர் மலர் பறித்தல், அலகிடுதல், மெழுகிடுதல், திருவீதி

---

*இன்று இது 'திருநீர்(மலை)' என வழங்கப்படுகிறதுபோலும்!

தூய்மை செய்தல் ஆகிய கோவில் பணிகளைச் செய்பவர் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன.*

**பொதுச் செய்திகள் :** (1) திருப்பாசூர்க் கோவில் இருவகை ஆட்சியைப் பெற்றிருந்தது. தானத்தார் என்ற ஆட்சிக் குழுவினர் ஒரு வகையினர். திருவுண்ணாழிகைச் சபையார் என்பவர் ஒரு குழுவினர். பின்னவர் கோவில் கருவறைத் தொடர்பான செயலைக் கவனிப்பவர். தானத்தார் என்பவர் கருவறை நீங்கலாக உள்ள கோவில் முழுமையும் கவனிப்பவர்.

(2) அதிராசேந்திர சோழன் காக்களூர் நாட்டுச் சேலையூர் (சேலை) என்னும் கிராமத்தில் விதிக்கத்தகுந்த சில வரிகளைப் பாசூரில் உள்ள 'வேயிடம் கொண்டருளிய மகாதேவர்'க்குத் தேவதானமாக அளித்தான். அப்போது அவனுடன் கங்கைகொண்ட சோழபுரத்து அரண்மனையில் உடன்கூட்டத்து அதிகாரிகள் இருந்தனர் என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது, (113 of 1929—30).

(3) திருப்பாசூரைச் சேர்ந்த ஒரு வணிகன் அவ்வூர்க் கோவிலில் ஒரு மண்டபத்தைக் கட்டி, சிவலிங்கத்தை எழுந்தருளச் செய்தான். அதன் பூசைக்காகப் பணமும் உதவினான்.

(4) கண்ட கோபாலன் என்பவன் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் நெல்லூர் உள்ளிட்ட தொண்டைநாட்டைச் சோழர்க்கு அடங்கி ஆண்டு வந்தான். அவன் தன் பெயராலேயே நாணயங்களை வெளியிட்டு வந்தான். 'கண்ட கோபாலன் புதுமாடை' என்று கல்வெட்டுக் குறிப்பதால் 'கண்ட கோபாலன் பழையமாடை' என ஒரு நாணயம் வழக்கிலிருந்தது என்பதும் அறியப்படுகின்றது. நெல்லூர்ப் புதுமாடை என்பது இவற்றின் வேறுபட்ட நாணயமாகும். அது வீரராசேந்திரன் காலத்தில் திருப்பாசூர்ப் பகுதியில் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும் என்பது தெரிகிறது.

(5) வேயிடங் கொண்டருளிய மகாதேவர், திருப்பாசூருடைய நாயனார் என்பன இறைவன் திருப்பெயர்கள். ஆளுடைய நாச்சியார் பணைமுலை நாச்சியார் என்பன அம்மன்

*350 of 1919 ; S.I.I. 7-97.

திருப்பெயர்கள். கோவிலின் திருமதில் 'தன்மதா வளவன் திருமதில்' எனப்பட்டது.

(6) இக்கோவில் கல்வெட்டுக்கள் பல மண்டல அதிகாரிகளையும் அரசாங்க உயர் அலுவலரையும் குறிக்கின்றன. அவருள் வாணதிராயன், சம்புராயன், இராசராசதேவர் என்ற வில்லவரையன், அரும்பாக்கிழான் அரையன் பொன்னம்பலக் கூத்தன் என்ற பொற்கோவில் தொண்டைமான், கூத்தாடுவான் காடுவெட்டி, நாடுடையான் திரு ஏகம்பமுடையான் என்ற உலகளந்த சோழப் பல்லவரையன், குன்றத்துச் சேக்கிழான் அரையன் ஆட்கொண்ட தேவன் என்ற முனையதரையன், முனையதரையன் திருவரங்கமுடையான், இராசாதிராச மலைராயன், வீரநரசிங்க தேவன் என்ற யாதவராயன் என்பவர் குறிக்கத்தக்கவராவர்.

(7) சோழர் காலத்தில் ஊராட்சி மன்றங்கள் இருந்தன என்பது சில கல்வெட்டுக்களால் தெரிகின்றது. கீழ்மலை *மோகூர் நாட்டு இராசநாராயணசதுர்வேதிமங்கலத்துச்சபை, திருப்பாசூர் ஊராட்சி மன்றம் என்பன குறிக்கத்தக்கவை.

(8) கல்வெட்டுக்களில் காணப்படும் தொண்டை மண்டலத்துக் கோட்டங்களாவன: ஈக்காட்டுக் கோட்டம் (ஈக்காட்டுக்கோட்டத்துக் காக்களூர் நாட்டுத் திருப்பாசூர்), மணவூர்க் கோட்டம், குன்றவத்தனக் கோட்டம், செம்பூர்க் கோட்டம், புலியூர்க் கோட்டம், செங்காட்டுக் கோட்டம். இக்கோட்டங்களின் பெயர்களும் இவற்றைச் சேர்ந்த உள் நாட்டுப் பகுதிகளின் பெயர்களும் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றன.

(9) திருப்பாசூரில் ஒரு தெருவின் பெயர் பிருதிவி மாணிக்கப் பாடித் தெரு என்பது (134 of 1929—30). கி. பி. 9-ஆம் நூற்றூண்டில் பல்லவ அரசனாக இருந்த நிருபதுங்கன் மனைவியின் பெயர் பிருதிவி மாணிக்கம் என்பது. அவள் பெயரால் ஊரின் ஒரு பகுதி அமைந்திருந்தது என்பது இக்கல்வெட்டால் தெரிகிறது.

---

*இன்றைய மோநூர் பழைய மோகூராக இருக்கலாமோ?

(10) அபராசிதச் சதுர்வேதி மங்கலம் என்பது கீழ்மலை மோகூர் நாட்டு ஊர்களுள் ஒன்றாகும். அபராசிதன் மேலே கூறப்பெற்ற நிருபதுங்க பல்லவனுக்குப்பின்பு பட்டம் பெற்றவன். அவன் காலத்தில்தான் ஆதித்தசோழன் பல்லவ நாட்டைக் கைக்கொண்டான். அபராசிதன் சதுர்வேதிகளுக்கு ஒரு சிற்றூரைத் தானமாக அளித்தான். ஆதலால் 'அபராசிதச் சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் ஊருக்கு ஏற்பட்டது என்பது இக்கல்வெட்டால் தெரிகிறது, (133 of 1929—30).

(11) பரமேசுவர மங்கலம் என்பது செம்பூர்க் கோட்டத்தைச் சேர்ந்தது. பரமேசுவரவர்மன் என்ற பெயருடன் பல்லவர் இருவர் ஆட்சிபுரிந்தனர். அவருள் ஒருவர் காலத்தில் இப்பெயர் பெற்றது போலும்! (130 of 1929—30).

(12) உத்தம சோழச் சதுர்வேதி மங்கலம் என்பது ஓர் ஊரின் பெயர். முதலாம் இராசராசனுக்குமுன் சோழப்பேரரசனாக இருந்தவன் உத்தமசோழன் என்பவன். இவ்வூர் அவன் பெயரைத் தாங்கியுள்ளது. எனவே, இது அவன் காலத்தில் சதுர்வேதிகளுக்குத் தானமாக வழங்கப்பட்டிருக்கலாம்.

(13) பக்தர்கள் தானத்தாரிடம் பணம் முதலியவற்றைக் கொடுத்துத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றச் செய்தனர்; கோவில் பூசை செய்யும் சிவப்பிராமணரிடம் பசுக்கள் முதலியன கொடுத்துத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றச் செய்தனர்; திருவுண்ணாழிகைச் சபையாரும் இப்பணியை மேற்கொண்டனர்.

(14) இக்கோவிலுக்குப் பணம் முதலியவற்றை உதவிய பக்தர்கள் மலை மண்டலம், சோழ மண்டலம், பாண்டி மண்டலம், தொண்டை மண்டலம் ஆகிய தமிழகம் முழுமையும் சேர்ந்தவராவர்.

(15) கூத்தாடும் நாய்ச்சி (தேவரடியாள்), தேவரடியாள் பொன்னுமை சூரை, கண்ணன் அரசு, சிவானந்தவல்லி உடைய பிள்ளை (தேவரடியாள் பெயர்), பொன்னம்பலக் கூத்தன், பனையாண்டி, நம்பி ஆளுடைய பிள்ளை, மணி நாகன், இடர்நீக்கி மல்லன், வேம்பன், பெரிய நாட்டு நங்கை (தேவரடியாள்), செங்கழி திருக்காளத்தி மாணிக்கம்,

பொற்கோவில் தொண்டைமான், கூத்தாடுவாள் காடுவெட்டி, திருவேகம்பமுடையான், வடுகநாதன், அறம் தழைத்தகையன், திருவரங்கமுடையான், தில்லைநாயகன் என்பன கல்வெட்டுக்களிற் கண்ட பெயர்களுள் குறிப்பிடத்தக்கவையாகும்.

அரிய செய்தி: மைசூர் நாட்டில் நந்திதுர்க்கமலை அருகில் தோன்றும் பாலாறு கிழக்குத் தொடர்ச்சி மலையின் வழியாக வட ஆர்க்காடு மாவட்டத்துள் நுழைந்து, வாணியம்பாடி, ஆம்பூர், வேலூர், ஆர்க்காடு, காவேரிப்பாக்கம், வழியாகப் பாய்ந்து, இன்று காஞ்சிக்குத் தெற்கே சென்று செங்கற்பட்டு வழியாகப் பாய்ந்து சதுரங்கப் பட்டணத்திற்குத் தெற்கே மூன்றுகல் தொலைவில் கடலிற் கலக்கிறது. ஆனால் பழைய பாலாறு என்ற பெயர்கொண்ட ஆற்றுப் போக்குக் காணப்படுகிறது. இவ்வாறே திருமாற்பேறு என்ற ஊருக்குக் கிழக்கிலும் பழைய பாலாறு காணப்படுகிறது. திருஞானசம்பந்தர் திருமாற்பேறு பாலாற்றின் கரையில் இருந்ததாகப் பாடியுள்ளார். இவ்வாறே சுந்தரர் திருமுல்லைவாயில் பாலாற்றின் கரையில் இருந்தது எனக் கூறியுள்ளார். திருவேற்காடு பாலாற்றுக்கு அண்மையில் இருந்ததாகச் சேக்கிழார் பெருமான் செப்பியுள்ளார். அவரே, இலம்பையூங்கோட்டூர், திருவாலங்காடு என்பன பாலாற்றுக்கு வடகரையில் இருந்தன என்று கூறியுள்ளார். கலிங்கத்துப்பரணியும் காஞ்சிக்கு வடகிழக்கில்தான் பாலாறு இருந்தது என்று கூறுகிறது. இவை அனைத்தையும் நோக்க, பழைய பாலாறு திருமாற்பேறு, திருவேற்காடு, திருமுல்லைவாயில் வழியாகச் சென்று சென்னைக்கு வடக்கே கடலில் கலந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகும்.

திருப்பாசூர்க் கல்வெட்டு ஒன்று, "திருமஞ்சனத்திற்குப் பாலாற்று நீரை கொண்டுவர ஏற்பாடு செய்தனர்" என்று கூறுகிறது. இதனை நோக்க, பாலாறு திருப்பாசூர்க்கு அண்மையில் பாய்ந்துகொண்டிருந்தது என்பது தெளிவாகும். இக்கல்வெட்டுச் செய்தி, பாலாற்றின்பழைய போக்கை அறிய எந்த அளவு துணைபுரிகிறது என்பது விளங்குகிறதன்றோ?

---

# “மெய்யுணர்வு விழா முன்னுரை”*

[திரு. ந. சங்கரன், எம்.ஏ., எல்.டி., நகராண்மைக் கழகத் துணை ஆணையாளர், சென்னை]

தென்னிந்தியாவானது பல நூற்றாண்டுகள் இந்துமதத்தின் மறுமலர்ச்சிக்குத் தாயகமாக இருந்துவந்திருக்கின்றது. எத்தனையோ சமயத் தலைவர்களும் தத்துவஞானிகளும் தோன்றியருளி நமது மாபெரும் மதத்தின் கொள்கைகளைப் பரப்பியுள்ளனர். கி. பி. பதினொன்று பதின்மூன்றும் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலமானது உயிரின் உண்மை இயல்பையும், அத்வைதத்தின் அரும்பொருளையும் நுணுகி ஆராய்வதில் பெரிதும் ஊன்றித் தலைப்பட்டிருந்தது. ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ இராமானுஜர், ஸ்ரீ மத்வர் ஆகிய மூன்று பெருந்தென்னாட்டின் சமயாசாரியர்களும் தத்தமது பேரறிவின் பெற்றிக்கேற்ப வேதாந்த சாத்திரப் பொருளை விளக்கிக் காட்டியருளினர். இம்முப்பெரும் ஆசாரியர்களுக்கும் சிறிது காலத்திற்குப் பின்னர் ஸ்ரீ மெய்கண்ட தேவர் தோன்றியருளினார். அவரே தமிழ் மக்களின் சைவசமயக் கொள்கைகளை வரையறை செய்து முறைப்படுத்தினர். பதின்மூன்றும் நூற்றாண்டின் முதற்பகுதியில் விளங்கிய அவர், சைவ சமயத்தின் முதன்மையான சிறந்த கொள்கைகளை யெல்லாம் ‘சிவஞான போதம்’ என்னும் தமது மெய்கண்ட நூலின்கண் ஒருங்கே தொகுத்தருளினர்.

சைவசமயத்தின் அடிப்படைக் கொள்கைகள் அனைத்தும் மெய்கண்டாருக்கு முன்னரே, சைவசமய குரவர்களின் திருப்பதிகங்களிலும், தத்துவத் துறையிலும் மறைபொருள் நுட்பங்களிலும் சிறந்து விளங்கும் திருமூலர் திருமந்திரப் பாடல்களிலும், ஆங்காங்கே அமைந்துகிடக்கின்றன. எனினும், வேதம் ஆகமம் என்னும் இரண்டினையும் அடிப்படை

---

*சென்னையில் 24–4–60 முதல் 7–5–60 முடிய ஆசிரியர் திரு. இளவழகனர் அவர்களின் ‘சிவஞான போத விரிவுரைகள்’ நிகழ்ந்த பொழுது நிகழ்த்தியது. தமிழாக்கம் : முருகவேள்.

யாகக் கொண்டு தத்துவ ஆராய்ச்சித் துறையில் முடிந்த முடிபாகக் கருதத்தகுந்த வகையில் தருக்க நெறிமுறையில் சித்தாந்தக் கொள்கைகளை விளக்குதலில் மெய்கண்ட தேவர்க்குச் சிறிது முற்பட்ட திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் இரு நூல்களைத் தவிர, வேறு முயற்சிகள் எதுவும் செய்யப்படவில்லை. மெய்கண்ட தேவரின் சிவஞானபோதம் என்னும் நூலானது,வேதாந்த தத்துவத்தின் முரண்பாடுகளை ஒதுக்கி அவற்றிற்கிடையே சமரச ஒருமை காணும் வகையிலும், எல்லாச் சமயங்களையும் தன் வசத்தே தழுவிச் செல்லும் இயல்பினதாகவும், உணர்வுக்கு உகந்ததாகவும், தமிழ்ச் சைவத்தினை விளக்கும் திறனில் தலைசிறந்து ஒப்பற்ற பெருமையுடையதாகத் திகழ்கின்றது.

ஆசிரியர் மெய்கண்ட தேவரின் சிவஞான போதமானது, 'சைவ சித்தாந்தம்' எனப்பெறும் தென்னிந்தியச் சைவநெறியின் மிகப் பெரிய நங்கூரம் என மதிக்கப்படுகின்றது. சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கையின் சிறப்பும் பெருமையும் பற்றிப் பல பெரிய மேனாட்டு அறிஞர்கள் சிறந்த புகழுரைகள் வழங்கியுள்ளனர். சிறந்த கல்வியாளரும், புகழ்பெற்ற கிறித்தவ ஊழியரும், மாணிக்கவாசகரின் திருவாசகத்தினை வியத்தகு முறையில் மொழி பெயர்த்து உதவியவரும் ஆகிய ரெவரண்ட் டாக்டர் - ஜி. யூ. போப் அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார் :

"தென்னிந்திய மக்களின் மிகச்சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தமாகும்...சைவசித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்ததும், பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடனின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்குரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக்கொள்கைகளுள் எல்லாம் தலைசிறந்ததும் ஆகும்."

இங்ஙனமே, ரேவண்ட் டபிள்யூ. கோடி என்பவர், "பிற எல்லா ஆராய்ச்சி வகைகளையும் கொள்கை அல்லது வழிபாட்டு முறைகளையும்விட மேலானதாகச் சைவசித்தாந்தம் சில சிறப்பியற் பண்புகளைத் தன்னகத்தே கொண்டு

ஒளிர்கின்றது. அது மிகவும் பழமை வாய்ந்ததாய், அப் பழமையினாலாய பெருமைகளைப் பெற்று விளங்குகின்றது. சமய உலகில் தென்னிந்தியாவில் உள்ள மிகப் பெரும்பான் மையான சிறந்த கருத்துக்களுக்கெல்லாம் சைவ சமயமே நேரிதின் உரிமைத்தொடர்புடையதாகும். தமிழ் மக்களின் சமயமாகிய இதனை நோக்க அடுத்துள்ள ஏனைய பிறவெல் லாம் ஒப்பியல் முறையில் அயலவர்க்குரியனவும், அண்மையில் தோன்றியனவுமேயாகும். சமய ஆராய்ச்சித் துறையிலும், கொள்கை, வாழ்க்கை என்பனவற்றின் வெளிப்பாட்டு முறை யிலும் மிகமிகச் சிறந்த தொன்றாகத் தென்னிந்தியா பெற் றிருப்பது சைவ சித்தாந்தமேயாகும்" எனக் கூறியுள்ளார்.

டாக்டர் - எல். டி. பார்னேட் என்பவர், தமது 'இந்திய உள்ளம்' என்னும் நூலில், "உலகில் வேறு எந்தச் சமய மும் இத்துணை வளம்மிக்க பக்தி இலக்கியங்களையும், அரிய உணர்ச்சிப் பெருக்கத்தினையும், அழகிய கருத்து வெளிப் பாட்டினையும் தோற்றுவிக்கவில்லை" எனக் கட்டுரைக்கின்றார்.

ரேவரண்ட் என். மேக்நிக்கல் என்பவர், தம்முடைய 'இநதியக் கடவுட் கொள்கை' என்னும் நூலில், "கடவுட் கொள்கை பற்றி நோக்கும்போது இந்திய நிலத்தில் தோன் றிய ஏனைய எல்லாவற்றினும் மிகப் பெரிதும் மதிக்கத்தகுந் தது சைவ சித்தாந்தம் எனலாம். இந்தியச் சமய நூல்களில் வேறெங்கும் இத்துணை முழு அளவிலும் சிறந்த நிலையிலும், உயிர்களின் மீட்சி குறித்து உலகத்தோடு தொடர்புகொண்டு அதனை இடைவிடாது இயக்கிவரும் கடவுட் பொருளைப் பற்றிய கொள்கைகள், திறம்பட வெளியிடப் பெறவில்லை. கடவுள் என்பவர் ஒழுக்க நெறிப் பொருளாய், முழுவதும் அருள்வடிவத்தில் இயங்கி நிற்பவர் என்னும் அடிப்படைக் கருத்தினை மிக விரிந்த எல்லையில் இனிது உணர்ந்துகொண் டதும், விளக்குவதும் வேறு எதுவும் இல்லை" எனப் புகழ்ந் துள்ளார்.

தற்கால வாழ்க்கையானது, நல்லனவும், தீயனவுமாகிய வாழ்க்கை அமைவுகளோடு கூடியதாய், உண்மையான உள்ள

நிறைவுக்கும் அமைதிக்கும் ஏற்றதாக விளங்கவில்லை. திரைப் படம்—வானொலி—செய்தித்தாள்கள்—பேச்சுமேடை என்பன, உள்ளத்தை மெலியுறுத்தி நரம்புகளையும் பெரிதும் சோர்வுறச் செய்கின்றன. நாம் உள்ளபடியே இவற்றினின்று விடுதலை பெறவேண்டியுளது. ஆதலின், மக்களின் உள்ளத்தில் இவற்றிற்காக ஏதேனும் உண்மையான—உறுதியான காவலரண் அமைக்கப்படவேண்டுமாயின், வாழ்க்கையைப் பொறுத்த முதன்மையான பல வினாக்களையும், மனித குலத்தின் நியதி முடிவையும் ஆராய்ந்துணர்த்தும் சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற அழியாப் பேரிலக்கியங்களைப் படித்தலில், உறுதி மிக்க ஊக்கத்தை மக்களிடையே உண்டாக்குதல் ஒன்றே அதற்கு வழியாகும்.

அழியாப் பேரிலக்கியங்களையும் ஆன்மீக நூல்களையும் படிப்பதுதான், சிறந்த சிந்தனையாளர்களும் ஞானிகளும் விளக்கும் உயரிய உண்மைகளை நாம் சிந்தித்து உணர்தற்கு, உண்மையில் துணைபுரிகின்றது. மனித குலத்தின் நலத்திற்காக எல்லாக் காலங்களிலும், பெருங்கவிஞர்களும், பெருந்தத்துவ மேதைகளும், புதியன படைக்கும் சிந்தனையாளர்களும், உலகப் புகழ்பெற்ற வாழ்வியல் ஒழுங்குமுறைகளை வகுப்பவர்களும் ஆகிய அனைவரும், தமது சிந்தனைகளையும் ஆராய்ச்சி முடிவுகளையும் தந்து சென்றுள்ளனர். தத்துவத் துறை யுண்மைகளில் பெரும் பகுதியை, இந்தியாவானது உலகுக்கு வழங்கியுள்ளது என்பதனை எவரும் மறுத்தல் இயலாது. அன்றியும், இந்தியாவானது தனக்கு நேர்ந்த எத்தனையோ பல மாறுதல்களையும் சூழ்நிலைகளையும் கடந்து இன்னும் நிலைபெற்று நிற்கின்றதெனின், அதற்கு மிகப் பெரிய அளவு காரணமாகத் திகழ்வது, நம்முடைய தத்துவப் பேரறிஞர்களும், ஞானிகளும், முனிவர்களும் நமக்காக விட்டுச் சென்றுள்ள ஒரு சில மன நிலைப் பழக்கங்களும் நம்பிக்கைகளுமே ஆகும். புலனடக்கப் பயிற்சியிலும், பிற உயிர்களுக்கு இரக்கம் காட்டுதலிலும், மனித மனத்திற்கும் உயிரின் இயக்கத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்புள்ளது

என்பது சிறந்ததொரு பேருண்மையாகும். வேதாந்தத்தின் விளக்கவுரையாக விளங்கும் பகவத் கீதையானது, மன அடக்கம், ஆன்மீக உள்நாட்டம் என்பவற்றின் தேவையைப் பெரிதும் வற்புறுத்துகின்றது. உலகின் பல்வேறு சமயங்களின் சிறந்த போதனைகள் அனைத்தும் இவ்வடிப்படைக் கொள்கைகளாகிய சட்டத்தினுள்ளேயே அமைக்கப்பட்டுள்ளன. இந்தியாவின் உயிராற்றலானது காலப் போக்கில் அவ்வப்போது ஏற்பட்டுவருகின்ற எத்தனையோ பல இடர்ப்பாடான சூழ்நிலைகளிலும் மக்களைப் பாதுகாத்து வந்துள்ளது. காணப்படாத ஒரு முதற்பெரும் பொருளின்பாற் கொண்டுள்ள ஆன்மீக நம்பிக்கையே நம் மக்களுக்கு உயிர்ப்பாற்றலை அளித்து வருகின்றது. இந்நாளைய வேகம் மிக்க உலகில் இது பெரும்பாலும் முதன்மையற்றதாகவும் மிகவும் பொருத்தமில்லாததாகவும் சிலருக்குத் தோன்றக்கூடும். ஆயினும், எத்தனையோ பல வெளிப்புற அபாயங்களிலும், நமக்குள்ளேயே நிகழும் பலதிறப் பூசல்கள் பிணக்குகளிலும் தப்பி உய்ந்து, இன்னும் நாம் நிலைபெற்று வரும் திறனுக்குக் காரணம், இவ்வுயிர்ப் பொருளை நாம் விடாமல் இறுகப் பற்றிக்கொண்டு வருதலே ஆகும். ஆகலின் இந்நாளைய இளைஞர்கள், நிறைந்த பெருவாழ்வு வாழவேண்டுமாயின், உண்மையை உணர்த்தும் சிறந்த சமய இலக்கிய நூல்களில் விளக்கப்பெற்றுள்ள ஆழ்ந்த அநுபவங்களையும், உயரிய நோக்கங்களையும் ஆராய்ந்துணர்ந்து கொள்ளுதற்குப் போதிய வாய்ப்புக்கள் அளிக்கப்பெறுதல்வேண்டும்.

இங்கு விளக்கப் பெற இருக்கும் உண்மைகள் எவ்வளவுக்கெவ்வளவு பரவுகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு, நமது பழைமையும் பெருமையும் வாய்ந்த பண்பாட்டில் தோய்ந்து விளங்கும் உயரிய எண்ணங்களும் குறிக்கோள்களும் மக்களின் அறிவிலும் உள்ளத்திலும் பெருங்கிளர்ச்சியையும் எழுச்சியையும் விளைவிக்கும். ஆதலின், கடந்த இருபது ஆண்டுகளாக ஒவ்வொரு வாரமும் ஞாயிறு தோறும், சிவஞான போதம், சிவஞான சித்தி முதலிய மெய்கண்ட நூல்களுக்கு விரிவுரைகள் தொடர்ந்து நிகழ்த்தப் பெற்றுவந்த

செய்தியானது பெரிதும் மனநிறைவையும் மகிழ்ச்சியையும் தருவதாகும். இந்த விரிவுரைகளை ஆசிரியர் இளவழகனார் அவர்கள் இவ்வளவு காலந் தொடர்ந்து நடத்தி இவ்வரும் பெரும் பணியை நிறைவேற்றியது தக்கோர் எல்லாராலும் பாராட்டப்படவேண்டிய ஒன்றாகும். இவ்விழாவிற் கலந்து கொள்ளுதற்காக மட்டுமின்றி, இவ்விழாவுக்கென அமைக்கப் பெற்றுள்ள வரவேற்புக் குழுவின் தலைவனாக இருக்க நேர்ந்த தற்கும் நான் மிகவும் மகிழ்ச்சியும் பெருமிதமும் கொள்ளு கின்றேன்.

விழாக் குழுவின் பெயரிலும் அதன் சார்பிலும் இவ்விழா வெற்றிபெற நிகழ்தற்குத் துணைபுரிந்த ஒவ்வொருவருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்வதுடன், இவ்விழா ஏற்பாடுகளில் ஏதேனும் குற்றங்குறைகள் நேர்ந்திருக்குமாயின் பொறை பாராட்டியருளவும் வேண்டுகின்றேன்.

கடந்த இருபது ஆண்டுகளாக நிகழ்ந்துவந்த வகுப்பு களிற் கலந்துகொண்டு பயன் அடையும் வாய்ப்பைப் பெறாத நூற்றுக்கணக்கான - ஆயிரக்கணக்கான மக்கள் அனைவரும், இவ்விரிவுரைகளைக் கேட்கும் வாய்ப்பும் வசதியும் பெறுதல் வேண்டும் என்பதே விழாக்குழுவினரின் நோக்கமாகும். இந் நோக்கத்துடனேயே ஆசிரியர் இளவழகனார் அவர்கள் ஒரு நாளைக்கு ஒருசூத்திரமாகச் 'சிவஞான போத'த்தின் பன்னிரு சூத்திரங்களையும் குறித்துப் பேசுவார்கள். இதன்கண் ஆர்வ முடைய பொதுமக்கள் இவ்வரிய வாய்ப்பினைப் பற்றிக் கொண்டு பெருந்திரளாகக் குழுமிவந்து விரிவுரைகளைக் கேட் டுப் பயன் அடைவார்கள் என எதிர்பார்க்கின்றோம்.

— —

## மதிப்புரை

நிட்டானுபூதிசாரம் மூலமும் உரையும்: திருக்கயிலாய பரம்பரை, திருக்கோவலூர் ஆதீனம் ஐந்தாம் பட்டம் திருப் பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், இத்தலை முறையில் தமிழகத்தில் ஒரு பெரும்

ஞானப் பேரொளி ஞாயிறென விளங்கி, நல்லொழுக்கத்தையும் பக்திஞானங்களையும் பரப்பி, சைவத்தைப் பல துறைகளிலும் காத்து வளர்த்தருளிய உத்தம குருமூர்த்தி ஆவார்கள். அவர்களது ஆதீனத்தின் முதற் குரு மூர்த்திகளாகவும் சிவானுபூதிப் பெருஞ் செல்வராகவும் திகழ்ந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சுவாமிகள் அருளிச் செய்ததே நிட்டானுபூதி சாரம் என்னும் இந்நூல். இந்நூலாசிரியர் 17-ஆம் நூற்றாண்டில் அவதரித்தவர்கள். சாந்தலிங்க சுவாமிகள், குமாரதேவர், சிதம்பர சுவாமிகள் போன்ற சிறந்த அனுபூதிமான்களும் இந்நூலாசிரியரின் காலத்தவர் ஆவர். நிட்டானுபூதிசாரம் மட்டுமே யன்றி,வேறு முப்பது நூல்களும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளால் அருளிச் செய்யப் பட்டுள்ளன. நிட்டானுபூதிசாரம் என்பது, தன் பெயருக்கு ஏற்ப, மிகமிகச் சிறந்ததோர் அனுபூதி நூல். இது 91 செய் யுட்களைக் கொண்டது.

" அத்தனூர் தமைக்கயிலை யிடத்துமையாள் வணங்கி
மகிழ்ந்தன்பிற் கேட்ப
உத்தரவா துளம்தன்னில் நாலேழாம் படலந்தில்
உண்மை ஞான
முத்தியினை உதவுநிட்டா அனுபூதி தனையெடுத்து
மொழிந்தார் ! அத்தை
இத்தலனில் யான் தமிழாற் புல்லறிவு கொடுபுகல
இசைந்து ளேனால் "

என ஆசிரியர் கூறுமாற்றான், இந்நூல் வரலாறு உணரப்படும்.

இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பகுதியில், சைவசமய குரவர் நால்வரை அடுத்து, பசவதேவர் - சென்ன வசதேவர் - குகை நமசிவாய தேவர் - குருநமசிவாய தேவர் - சிவசரணர் என்பவர்கட்கு வணக்கம் கூறப்பட்டுள்ளது. பின்னர், ஒரு மொழி - சும்மா இருத்தல் - மகாவாக்கியம் என்னும் அரிய பெரிய மறைபொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. சதா நிட்டை கூடுகின்ற அனுபவ முடையோர்களுக்கு மட்டுமே

முக்தி கிடைக்குமென்று இந்நூல் கட்டுரைக்கின்றது. 27 செய்யுட்களில் சின்முத்திரை, அதை அனுபவிப்போர், அதனைப் பெறுதற்குரிய ஆசனம் முதலியவை, சாம்பவி நிட்டை விதிகள், அதனால் எய்தும் காட்சிகள், அதீத மௌன நிலையின் இலக்கணங்கள், தத்துவமசி மகாவாக்கிய அனுபவம் இவைகள் விளக்கப்படுகின்றன. பின் 10 செய்யுட்களில் திருவைந்தெழுத்தின் வகைகள், அதை உபதேசித்தற்குரிய ஆசிரியர், உபதேசம் செய்தற்குரிய மாணவர் முதலிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. அதன்பின் 14 செய்யுட்களில் நின்மல நிட்டை இயல்புகளும், அடுத்து வரும் 8 செய்யுட்களில் வீரசைவ பூசை முறைகளும் பிறவும் உணர்த்தப்பட்டுள்ளன.......

இந்நூலின் உரை, திருமூலர் மரபில் வந்த தவத்திரு முத்துக்கிருஷ்ண பிரம்ம சுவாமிகளால் கி.பி. 1845-ல் வரையப்பெற்றது. விரிவாகவும் தெளிவாகவும் அமைந்துள்ளது. வடலூர் இராமலிங்க அடிகளார் போன்ற சான்றோர்கள் இருபதின்மர் இந்நூலுரையைப் பாராட்டியுள்ளனர். இவ்வுரையின்கண், 99 நூல்களிலிருந்து எடுத்த 410 அரிய பாடல்கள் மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன. இவைகளை ஊன்றிக் கற்றுப் பொருளுணர்தலால், சமயம் சாத்திரம் சுவானுபூதி என்பவைகளைப் பற்றிய அறிவு வளரும். அனுபூதியில் ஆர்வம் பெருகும். இந்நூல் இப்போது 7-ஆம் பட்டத்தில் இருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் பணித்தருளியபடி, நமது சமாஜப் பேரன்பர் திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களால், அரிய முறையில் ஆராய்ந்து, சிறந்த அகராதி அனுபந்தங்களுடன், திருத்தமாகச் செவ்விய முறையிற் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

[பக்கம் : 216. விலை ரூ. 2. கிடைக்குமிடம் : ஸ்ரீமத் ஞானியார் மடாலயம், திருப்பாதிரிப்புலியூர்.]—முருகவேள்.

---

நிகழ்ந்தது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளுடன், மதுரை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளும் இம்மாத வழிபாட்டிற் கலந்து கொண்டமை பெரிதும் சிறப்பாகக் குறிப்பிடற் பாலது. மேயர் கம்பெனி மாசிலாமணி முதலியார், சாரதி பிலிம்ஸ் இராமமூர்த்தி, டைரக்டர் சோமு, வே. நடராசன், ச. சிவகுமாரன், புலவர் முருகவேள், சயப்பாக்கம் சோமசுந்தரஞ் செட்டியார் முதலிய பலரும், பலவேறு சமய சபைகளுடன் வழிபாட்டிற் கலந்து கொண்டனர். சென்னையினின்று போந்த வழிபாட்டுக் குழுவினர் அனைவரையும் அன்று நண்பகல் வரவேற்று, வாலாசாபாத் இந்துமத பாடசாலையின் அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள், சிறந்ததொரு விருந்து அளித்து இனிய பல உபசாரங்களைச் செய்தார்கள். திருமாற்பேற்று ஊர்ப்பொதுமக்கள் அன்று மாலையில், "பொருட் சமய முதற் சைவ நெறி தான் பெற்ற புண்ணியக்கண் இரண்டு" எனலாம்படி விளங்கிய இரண்டு ஆதீனப் பெருமக்களையும் பிற அன்பர்களையும் பூர்ணகும்பம் முதலிய சிறப்புகளுடன் வரவேற்று, ஊர்வலம் செய்வித்து, வழிபாட்டைச் சிறப்புற நடத்திக் கொடுத்தனர். சொற்பொழிவுகள் 10 மணியளவு வரையில் நிகழ்ந்தன. சுற்றுப்புறப் பொதுமக்கள் அனைவரும் புத்துணர்ச்சியும் ஆர்வமும் கொண்டு மகிழ்ந்தனர்.

பிரிவாற்றாமை : பூவாளூர்ச் சைவ சித்தாந்த சபையின் தலைவராகப் பல ஆண்டுகள் இருந்து பணிபுரிந்தவரும், திருத்தவத்துறை திருமங்கலம் ஆகிய சிவ தலங்களின் இறை பணியாளராகத் திகழ்ந்தவரும், நமது சமாஜத்தின் பேரன்பரும், மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாற் போற்றியவரும் ஆகிய சைவப் பெரியார் திரு. அ. நமசிவாயஞ் செட்டியார் அவர்கள் தமது 65-ஆம் வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தமை யறிந்து வருந்துகின்றோம். அவர்தம் ஆருயிர் சிவபிரான் திருவடி நீழலில் அமர்ந்து, அருளின்ப நுகர்வில் திளைப்பதாக !

# சமாஜத் தேர்வுகளின் பாடதிட்டங்கள்

இளஞ்சைவப் புலவர் தேர்வு 1960 : A. இலக்கியம் : 1. திருக்குறள் அறத்துப்பால் (பரிமேலழகர் உரை) 2. திருநாவுக்கரசர் புராணம் முழுதும் 3. சமயக் கட்டுரைகள் (பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார்) 4. முருகன் அல்லது அழகு (திரு. வி. க.) B. சைவ சாத்திரம் : 1. திருவுந்தியார் 2. திருக்களிற்றுப்படியார் 3. திருவருட்பயன் 4. உண்மை விளக்கம்.

சைவப் புலவர் தேர்வு : A. இலக்கியம் : 1. திருஞானசம்பந்தர் புராணம் முழுதும் 2. திருக்கோவையார் 200 பாடல்கள் (பேராசிரியர் உரை) 3. திருவாசகம் திருச்சதகம் (பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் உரை) 4. சைவ சித்தாந்த ஞானபோதம் (மறைமலையடிகள்) 5. திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே (க. வச்சிரவேலு முதலியார், பி.எ.,எல்.டி) B. சைவ சாத்திரம் : 1. சிவஞானபோதச் சிற்றுரை 2. சிவஞான சித்தியார் சுபக்கம் (சிவஞான சுவாமிகள்) 3. சிவப்பிரகாசம் (மதுரைச் சிவப்பிரகாசர் உரை).

தேர்வு எழுதுவோர் பாடதிட்டத்திற் குறித்துள்ள சித்தாந்த சாத்திர மூலங்களை நன்கினிது மனப்பாடஞ் செய்திருத்தலும், தமிழ் இலக்கண இலக்கியங்களில் நல்ல பயிற்சி பெற்றிருத்தலும் வேண்டும். இடையிற் சில ஆண்டுகளாக நின்று போயிருந்த பரிசளிப்பு, முதல் வகுப்பில் தேர்ச்சி பெறும் இளைஞர்க்கு, அதற்கென அன்பரொருவர் அண்மையில் வழங்கியுள்ள மூலப்பொருளினின்று கிடைக்கும் வருவாயைக் கொண்டு இயன்ற அளவு வழங்கப்படும். இளஞ்சைவப்புலவர் தேர்வுக்கு ரூபா மூன்றும் சைவப் புலவர் தேர்வுக்கு ரூபா நான்கும் பதிவுக் கட்டணம் ஆகும். விண்ணப்பம் அனுப்பும் இறுதி நாள் 20-9-60. தேர்வு நவம்பர்மாதம் மூன்றும் ஞாயிற்றுக்கிழமையில் நடைபெறும்.

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.